9th August 1960]

SRI M. K. SOMASUNDARAM: கடந்த ஐந்தாண்டுகளுக்குள் பப்ளிக் ஹெல்த் ஸ்டாப்-க்கு விட்லி கவுன்சில் கூட்டப்பட்டதா? அப்படியில்லையென்றால் ஏன் கூட்டப்படவில்லை? இனிமேலாவது கூட்டப்படுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: *1959*-ல் கூடியிருக்கிறது என்று சொன்னேன். பல சமயங்களில் விட்லி கவுன்சில் கூடியிருக்கிறது. பல விஷயங்களைப்பற்றி ஆலோசித்திருக்கிறது.

SRI S. M. ANNAMALAI: இந்தக் கவுன்சில் செய்த சிபார்சுகளில் இதுவரை சர்க்கார் எதை எதை அமுல் நடத்தியிருக்கிறார்கள்?

THE HON. SRI C. SUBRAMANIAM: பல விஷயங்கள் அமுல் நடத்தப்பட்டிருக்கின்றன. பல அலுவலகங்கள் இப்பொழுது மின்சார வசதி பெற்று வருகின்றன. பின்னர், "பே கமிஷன்"-க்கு அனுப்பி அவர்கள் செய்த சிபார்சின் பேரில் இவர்கள் கேட்டுக் கொண்டிருந்த பல விஷயங்கள் இன்று ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கின்றன.

*Quarters for women teachers*

* 41 Q.—SRI K. SATTANATHA KARAYALAR: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) whether it is a fact that the district boards have not spent the allotted sum provided for 1958–59 for constructing quarters for women teachers in rural areas;

(b) if so, what are the reasons; and

(c) what are the districts which have not utilised them?

THE HON. SRI C. SUBRAMANIAM: (a) Yes, Sir.

(b) & (c) The works were not commenced in 1958–59 in any district. The reasons were delay in selection of sites and delay in the approval of type designs.

SRI K. SATTANATHA KARAYALAR: ஆசிரியைகளுக்கு வீடுகள் கட்டுவது என்பது, எந்த டிஸ்ட்ரிக்ட்டிலும் செய்யப்படவில்லையா? அல்லது அப்படி செய்யப்பட்டிருந்தால் எந்தெந்த டிஸ்ட்ரிக்ட்களில் செய்யப்பட்டிருக்கிறது?

THE HON. SRI C. SUBRAMANIAM: *1959-60*-ல் சில கட்டி முடித்திருக்கிறார்கள்; சில கட்டிக் கொண்டிருக்கிறார்கள். அதே போல் *1960-61*-லும். எந்த ஜில்லாக்களில் என்பதுபற்றி முன்பே ஒரு கேள்விக்கு பதில் சொன்னதாக ஞாபகம்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR: Are the Government aware of the fact that although in certain districts these quarters have been completed long ago, they have not been occupied by women teachers because of the fact that these quarters are far away from the village?

THE HON. SRI C. SUBRAMANIAM: I have no such information.

[9th August 1960

SRI S. NAGARAJA MONIGAR: இந்தத் திட்டம் சென்ற ஆண்டு நடைபெருமல் போனதற்கு அங்குள்ள கல்வி அதிகாரிகள், மற்ற ஜில்லா போர்டு போன்ற ஸ்தாபனங்கள், அதுபற்றி அங்கு ஏற்பட்ட கஷ்டங்களை உத்தியோகப் பற்றற்ற அங்கத்தினர்களுக்கு தெரிவித்து அவர்கள் அவர்களுடைய சகாயங்களைத் தேடாமல்—அல்லது அவர்களுக்கு தெரிவிக்காமல்—இருந்ததும் ஒரு காரணம் என்பதை சர்க்கார் அறியுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: தாமதம் இருந்தது என்பது தெரிகிறது. தாமதத்தை நீக்க இப்பொழுது அறிக்கைகள் விடப்பட்டிருக்கின்றன. இப்பொழுது கொஞ்சம் ஜரூராக நடக்கிறது என்று கேள்வி.

SRI A. VEDARATHNAM: ஸ்தல ஸ்தாபனங்கள் ஆசிரியைகளுக்கு வீடு கட்டிக் கொடுக்க முன்வராத இடங்களில், அரசாங்க உதவி பெறும் பள்ளிகளுக்கு அரசாங்கமே இந்த உதவியை அளிக்க முன்வருமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: ஸ்தல ஸ்தாபனங்கள் ஏன் செய்யக் கூடாது என்று தெரியவில்லை. அவர்கள் கட்டாயம் செய்தாக வேண்டும்.

*Colleges of Physical Education*

SRI A. VEDARATHNAM: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) இம்மாநிலத்தில் எத்தனை உடற் பயிற்சிக் கல்லூரிகள் இருக்கின்றன?

(ஆ) பெண்கள் உடற்பயிற்சிக்கு என்ன ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது?

(இ) போஸ்ட்-பேசிக் பள்ளிகளுக்கு உடற் பயிற்சி ஆசிரியர் நியமிக்கும் உத்தேசம் உண்டா?

THE HON. SRI C. SUBRAMANIAM: (அ) Three, Sir.

(ஆ) There is provision for imparting instruction in physical education to girls both in high schools and colleges.

(இ) No, Sir.

SRI A. VEDARATHNAM: இந்த உடற் பயிற்சிக் கல்லூரிகளில் என்ன முறை அனுஷ்டிக்கப்படுகிறது? இந்திய முறையில், சூரிய நமஸ்காரம், ஆஸனம் போன்ற பயிற்சிகள் அங்கு அளிக்கப்படுகின்றனவா? அப்படியானல் அந்த ஆசிரியர்கள் அந்த முறையில் பயிற்சி பெற்றவர்களாயிருக்கிறார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM: இந்திய முறையிலும் விளையாட்டுகள் சொல்லிக் கொடுக்கப்படுகின்றன. சிலவிடங்களில், யோகாஸனம், சூரிய நமஸ்காரம் ஆகியவைகளும் சொல்லிக் கொடுக்கப் படுகின்றன என்பதுதான் எனக்குத் தெரிந்த வரையில்.